சென்னை, ஜூலை 17: நேற்று அசெம்பிளியில் கனம் மானியமாக ரூ 4791100/- அனுமதிக் கேட்கப்பட்டது. இவை 1937ல் சில ஜில்லாக்களில் அமுலாக்கப்பட்டது. பின்னர் 1939லிருந்து 1946 வரை காங்கிரஸ் அரசாங்கம் இல்லாதவரை பிரதம அட்வைசர் ஆட்சி ரத்து செய்தது. T. வல்லபதாஸ் வெட்டுப் பிரேரணையை பிரேரித்து மதுவிலக்கை உடனடியாக ரத்து செய்து படிப்படியாக கொள்ளவேண்டுமென்றும் அதை பரிசீலனை செய்ய அசெம்பிளி-கவுன்ஸில் மெம்பர்கள் கமிட்டி ஒன்றை நியமிக்கவேண்டும் என்றும் அதை பரிசீலனை செய்து சட்டத்தை நடத்துவதா என்பதை அக்கமிட்டி முடிவு கூறவேண்டும் என்றும் கோரினார். T. சுப்ரமணிய கவுண்டர் (சுயே) மதுவிலக்கை எதிர்த்தார். கள்ளச் சாராயம் காய்ச்சுவது இருநூற் தொழிலாகி விட்டதென்றார். டி.டி. ராஜன்: மதுவிலக்கு அமல் பற்றி பரிசீலனை செய்ய கமிட்டியை நியமிக்க வேண்டும் என்ற பிரேரணை நியாயமானது என்றும்; எதிர் கட்சியினரின் ஒத்துழைப்பைப் பெறத்து நல்ல முறையாகும் என்றார். வாஞ்சிய நாதம் ராஜா (ஜோ): வெட்டுப் பிரேரணையை ஆதரித்தார். மதுவிலக்கு தோற்றுப் போயிருப்பதால் ஒப்புக்கொண்டு செய்வதாகக் கூறி குற்றங்கள் அதிகரிப்பதை எடுத்துக் காட்டினார். K. அப்பளா நாயுடு (கிஷான் லோக்): வெட்டுப் பிரேரணையை ஆதரித்தார். ப. ஜீவா வெட்டுப் பிரேரணையை ஆதரித்து இந்த வகை அனுபவத்தைக் கொண்டு கட்டாயத் திட்டத்தை கைவிடவேண்டுமென்றார். பெண்களும் இதைக் குடிப்பதில் இருப்பவர்களின் தொகை அதிகரித்திருக்கிறதென்றும், போலீஸ்காரர்களும் உடந்தையாயிருப்பதாக கூறினார். வீ.கூர். கிருஷ்ணய்யர்: (சுயே) மதுவிலக்கு கொள்கை நல்லதென்பது பற்றி சந்தேகமில்லையென்றும், சட்டம் அமலில் தோற்றுவிட்டதென்றும், மதுவிலக்கு சட்டம் போர்வையால் ஒழிக்கப்படுவதாக கூறி அது சரியல்ல வென்றார். எ.ஸா.ஸி. அந்தோணிபிள்ளை: (ஜோ) வெட்டுப் பிரேரணையை ஆதரித்து மதுவிலக்குச் சட்டத்தை ரத்து செய்ய கோரினார்: எச்.டி. ராஜகவுண்டர்: சுயே வெட்டுப் பிரேரணைப்படி கமிட்டி நியமிப்பதில் தப்பு இல்லை யென்றார். மதுவிலக்கை அமல் செய்ய தனது திட்டம் வேறுபடும் இல்லையென்றால் அதை அமல் நடத்த முடியாதென்றார் துளசிராம கவுண்டர்: (சுயே-மாதோ) அமல் வெற்றிகரமாக நடக்காததால் மதுவிலக்கை ரத்து செய்ய வேண்டுமென கூறினார். டி.சண்முகம். (சுயே) மதுவிலக்கு ஒழிந்து விட்ட நிலையே என்று சொல்வதாகவும், மதுவிலக்கை ஒழிப்பதற்க காங்கிரஸ் காரர்கள் தேர்தல்சமயம் "கூறியதாகவும், ராஜாஜி மந்திரியாக இருப்பதனால் காங்கிரஸ் காரர்கள் ஆதரிக்கிறார்கள். ** ஜீவாவுக்கு ராஜாஜியின் பதில்: சென்னை, ஜூலை 17: மதுவிலக்கு பற்றி கமிட்டி பரிசீலிக்க விடவேண்டுமென எதிர்க்கட்சித் தலைவர் கொண்டுவந்துள்ள வெட்டுப் பிரேரணை புத்திசாலித்தனமான கட்சி பிரசாரமாகும். மதுவிலக்கு அமுலை ஆலோசிக்கவேண்டுமெனக் கவனிக்க கமிட்டி என்றால் அது வேறு விஷயமாகும். ஆனால் மதுவிலக்கு சாத்தியமாக சட்டம் தேவையா என்பது பற்றி கமிட்டி நியமிக்கவேண்டுமென அவர் கூறுகிறார். மதுவிலக்கு சட்டத்தை நன்றாக அமல் நடத்த முடியாதென்று கருதி அவர் வெளியிடுகிறார். அவர் அபிப்ராயம் முறைப்படி குற்றமாக எதையும் நான் கூறவில்லை. சு. மீண்டும் எதிர்கட்சியினர் அபிப்ராயம் "ஜி.பி.எம்" முறையென்று நினைக்கிறேன். பலவை சேர்த்துக் கொண்டு குறைந்தபட்ச வேலைக்கத்திட்டத்தை ஏற்படுத்தச் செய்யப்படும் பெயர்களில் இதுவும் ஒன்றாகும். ஆகவேதான் அப்பாதையில் உள்ள விஷயங்களை நான் ஒன்றாக்கவிட மறுக்கிறேன். மதுவிலக்கில் அமலால் குறைபாடுகள் உண்டென்று கூறுகிறார்கள் இவர். அதையும் மறுக்கவில்லை. மதுவிலக்குச் சட்டம் வேண்டாம் என்பவர்களும் மதுவிலக்கு நல்லது என்றும் ஆனால் அமலில் குறைகளுண்டு என்று கூறி அவ்வாறும் கூறுபவர்களை ஒன்று சேர்க்க செய்யப்பட்டுள்ள தந்திரமே வெட்டு பிரேரணையாகும். இம்மாதிரி ஒரு வெட்டு பிரேரணை கொண்டு வந்ததற்கு பதில் நேரடியாக மதுவிலக்கை ரத்து செய்ய ஒரு பிரேரணையை எதிர்க்கட்சித் தலைவர் கொண்டுவந்திருக்கலாம். அதுதான் நேராக நடப்பவர்கள் கையாளும் முறையாக இருக்கும். ஆனால், அப்படி அவர்கள் செய்யமுடியாது. அதன் காரணம் அதற்கு ஆதரவில்லாததையே சுட்டிக் காட்டுகிறேன். மதுவிலக்கு வேண்டாமென்று தைரியமாக சொல்லட்டும். அது வேறு விஷயம். குறை காட்டி காட்டி கமிட்டி நியமிக்க வேண்டுமாம். அது ஒவ்வொரு இடமாக போய் சாட்சியம் சேகரிக்க வேண்டுமாம். ஆனால் எல்லாம் மதுவிலக்கு விரோதிகளின் தந்திரமேயன்றி